# 41ம் ஆண்டு கம்பன் விழா

## நிறுவனத் தலைவர்
## அமரர் கா.அ.ச. பத்மநாபன் அவர்களின்
## நூற்றாண்டு நினைவு மலர்



தொகுப்பு

தமிழ்ச்செம்மல் பேராசிரியர்

முனைவர் **இரத்தின நடராசன்** செயலாளர்,

கம்பன்கழகம், திருப்பத்தூர். வே. மா.

# 41ஆம் ஆண்டு
# கம்பன் விழாக்குழு
# உறுப்பினர்கள்

தலைவர் :திரு. எஸ்.எஸ். மணியன்

துணைத்தலைவர்கள் : திரு. வி.ஆர். முருகன்
ஆடிட்டர் திரு. எஸ். இரவிக்குமார்
திரு. C.K.D. முரளிதரன்

செயலாளர் : பேராசிரிர், முனைவர்
"தமிழ்ச்செம்மல்" இரத்தின நடராசன்

பொருளாளர் /
கௌரவத்தலைவர் : திரு. சி.கே.டி. திருநாராயணன்

துணைப்பொருளாளர்கள் : திரு. எஸ். பாலசந்திரன்
திரு. க. துரை

## அமைப்பாளர்கள்

திரு. கே.எம். சுப்பிரமணியன்

நல்லாசிரியர். சி. மணி

திரு. பொன். செல்வகுமார்

திரு. ஆர்.ஆர். மனோகரன்

திரு. ச. சூரியகுமார்

# கம்பன் கழக நிறுவனர்
# அமரர் கா.அ.ச. பத்பநாபன்
# அவர்களின் நூற்றாண்டு



**கம்பன் கழகத்தலைவர்**
**1977 முதல் 1988 வரை**

வாழ்ந்த போது எங்களுக்கு உற்ற துணைவர்,
தலைவர்.
இன்று
எங்களின் வழிகாட்டி
வாழ்ந்தபோது உமது சொற்கள் வார்த்தைகள்
இன்று வேத வாசகங்கள்
வாழ்ந்தபோது எங்களோடு வாழ்ந்தீர்
இன்று
எங்கள் நெஞ்சங்களிலேயே வாழ்கின்றீர்.

கம்பன் கழகம்,
திருப்பத்தூர்

# திருப்பத்தூர் கம்பன் கழகத்தின் பெருமைமிகு வெளியீடு

## கா.அ.ச பத்மநாபன் - K.A.S. பத்மநாபன் அவர்களின் வாழ்க்கை குறிப்பு

பெயர் : K.A.S. பத்மநாபன்

தந்தை : பெரியவர் K.A. சண்முக முதலியார்

மனைவி : ஜெயலட்சுமி

மக்கள் : **மகன்கள்** **மகள்கள்**

1. S.P. மணவாளன் - இந்திரா
2. S.P. திருமலை - கோமேதகம்
3. S.P. அச்சுதன் - அஞ்சுகம்

பிறந்தநாள் : 20.3.1920

பிரிவுநாள் : 1.10.1988

தொழில் : பிரபல துணி வணிகம்

## பணிகள்

**தமிழ் மற்றும் இலக்கியம்**

கம்பன் கழக நிறுவனர் மற்றும் தலைவர் 1977 - 1988

**ஆன்மீகம்**

திருக்கோயில்கள் ஏரியா கமிட்டி உறுப்பினர், தலைவர் 1958 - 1966

ஸ்ரீ சுந்தரவீர ஆஞ்சநேயர் கோயில் நிர்வாக அறங்காவலர் 1950 - 1957

ஸ்ரீ தண்டாயுதபாணி சுவாமி கோயில் திருப்பணிக்குழு - பொருளாளர் 1971 - 1977

ஸ்ரீ தண்டாயுதபாணி சுவாமி கோயில் திருப்பணிக்குழு - தலைவர் 1977 - 1988

ஜலகாம்பாறை ஸ்ரீ வெற்றிவேல்முருகன் கோயில் திருப்பணிக்குழு - தலைவர் 1977 - 1988

திருப்பத்தூர் பகுதியில் பல திருக்கோயில்களுக்கு குடமுழுக்கு விழாக்கள் முன்னின்று நடத்தியது. திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகளின் நீண்ட நெடிய தொடர்பு

## பொது சமூக சேவைகள்

| | |
|---|---|
| சர்வவோதய மாநில மாநாடு - செயலர் | 1963 |
| காந்தி நூற்றாண்டு விழாகுழு - தலைவர் | 1969 |
| வட்டார வளர்ச்சி ஆலோசனை குழு - உறுப்பினர் | 1958 - 1966 |
| உணவு விநியோக கமிட்டி - தலைவர் | |
| ஆம்பூர் கூட்டுறவு சர்க்கரை ஆலை - இயக்குநர் | 1964 |
| திருப்பத்தூர் வீட்டுவசதி சங்கம் - செயலர் | 1964 - 1971 |
| திருப்பத்தூர் வீட்டுவசதி சங்கம் - உபதலைவர் / தலைவர் | 1971 - 1988 |
| இயற்கை பாதுகாப்பு மன்றம் - உபதலைவர் | 1978 |
| கிருஷ்ணகிரி கமலா நேரு மாணவர் இல்லம் - உறுப்பினர் / உபதலைவர் | 1970 - 1980 |

திருப்பத்தூர் சர்வோதய சங்க வளர்ச்சியில் ஈடுபாடு கிருஸ்துகுல ஆசிரம தொடர்புகள்

## கல்விப் பணிகள்

| | |
|---|---|
| நகராட்சி உயர்நிலைப் பள்ளி நூற்றாண்டு விழா - உறுப்பினர் | 1958 |
| ஸ்ரீ இராமகிருஷ்ண கல்வி சங்கம் - உறுப்பினர் | 1963 - 1988 |
| TMS மேல்நிலைப் பள்ளி - நிர்வாககுழு உறுப்பினர் | 1977 - 1988 |
| ஸ்ரீ மீனாட்சி அரசினர் பெண்கள் மேல்நிலைப் பள்ளி வளர்ச்சிகுழு உபதலைவர் / தலைவர் | 1978 - 1988 |

## அரசியல்

காங்கிரஸ் பேரியக்கத்தில் பல பொறுப்புகள் வகித்தது.

பெருந்தலைவர் காமராஜரோடு நீண்ட நெடிய தொடர்பு.

# கம்பன் கழக நிறுவனர் அமரர் கா.அ.ச. பத்மநாபன் அவர்களின் நூற்றாண்டு சில இனிய நினைவுகள்.






கம்பன் அடிப்பொடி சா. கணேசன் கா.அ.ச. பத்மநாப முதலியார், வி.ஆர். மாரிமுத்து செட்டியார் ஆகியோர் துவக்க விழா நிகழ்வில்

திருப்பத்தூரில் செங்குந்தர் தெரு நகரின் நடுவில் உள்ளது. அந்த தெருவில் அச்சுதன் ஸ்டோர்ஸ் என்ற துணிக்கடை மிகவும் பிரபலமாக இருந்தது. வெளியிலிருந்து நகருக்குள் நுழையும் அனைவர் கண்களிலும் "அச்சுதன் ஸ்டோர்ஸ்" தென்படும் அந்தக்காலத்தில் சுற்றிலுமுள்ள கிராம மக்களில் பெரும்பாலோர் தங்களின் பொங்கல் பண்டிகைக்கு திருமண வைபவங்களுக்கு துணிமணிகளை இங்குதான் வாங்குவார்கள்.

அவரின் தந்தை அமரர் கா. சு.ஷண்முக முதலியார் அவர்கள் குடியாத்தத்தில் 'திருமகள் மில்' என்ற நூற்பாலையைத் துவக்கினார் 1937 ஆண்டில்.

1954ல் காமராஜர் சட்டசபைத் தேர்தலுக்கு குடியாத்தத்தில் நின்றபோது பெரிதும் உறுதுணையாக இருந்தார்.

திருப்பத்தூருக்கு மறைந்த காமராஜர், அமரர் கிருபானந்தவாரியார் போன்றவர்கள் வருகை தருகின்றபோது அவர்கள் வீட்டில் உணவருந்தாமல் செல்வது கிடையாது.

பெரியவர் ஷண்முக முதலியார் தமிழில் பாண்டித்யம் பெற்றவர். 'ராகவன் புகழ் மாலை' என்ற நூலை எழுதினார். அவ்விழாவில் மறைந்த தலைமை ஆசிரியர்கள் டி.ஆர். இராமச்சந்திரனும், எஸ். சண்முகசுந்தரமும், நானும் உரையாற்றினோம்.

அமரர் கா.அ.ஷ. பத்மநாபன் அவர்களின் நூறாவது ஆண்டு இது.

அவர் பழகுவதற்கு இனிமையானவர். நல்ல பண்புகள் நிறைந்தவர். தொண்டுள்ளம் படைத்தவர்.

ஆலயங்களுக்கும், சமுதாயத்திற்கும், கல்விக்கும், தமிழுக்கும் என பல்வேறு பணிகளிலே தன்னை ஈடுபடுத்திக்கொண்டு அளப்பரிய பணிகளை செம்மையாகச் செய்தவர்.

எத்தனையோ குடும்பங்களுடன் நெருங்கிய நட்பும் தொடர்பும் கொண்டிருந்தவர். அதில் குறிப்பாக கரகப்பட்டி இராஜாதாரர் வெங்கடப்பா நாயுடு, அவரின் துணைவியள் பெருமைமிகு கொடை வள்ளல் பாப்பம்மாள், சைவப்பெரியார் கிருபானந்தவாரியார், ராவ்பகதூர் கிறிஸ்துகுல ஆசிரமத்தின் நிறுவனர்கள் டாக்டர் ஜேசுதாசன் சவரிராயன், டாக்டர் சேட்டன், டாக்டர் இராஜா போன்ற பலரோடு நல்ல தொடர்பு கொண்டிருந்தார்.

டாக்டர் மு. வரதராசனாரின் மாணவர்.

எத்தனையோ ஆலயங்களுக்கு கும்பாபிஷேகம் நடத்தியவர்.

வாரியார் அடிகளாருக்கு விழா எடுத்தவர்.

பெரியண்ணன், சின்னண்ணன் ஆகியோருக்கு நூற்றாண்டுவிழா எடுப்பதற்கும் காரணமாயிருந்தவர்.

ஆண்டுதோறும் மார்ச் மாதத்தில் திருப்பத்தூர் தமிழ் மன்றம் நடத்திய திங்கள் சொற்பொழிவுகளில் மார்ச் மாதத்தில் ஒவ்வொரு ஆண்டும் 'பெரியண்ணன், சின்னண்ணன்' ஆகியோர் பெயரில் சொற்பொழிவு நிகழ்த்துவதற்கு உதவியவர்.

இராமகிருஷ்ணா கல்விச்சங்கத்தில் உறுப்பினராக இருந்து அதன் மேம்பாட்டிற்கு பாடுபட்டவர்.

பிறர் வயதில் சிறியவர்களாக இருந்தாலும், அனைவரையும் அன்புடனும், பண்புடனும் நடத்தியவர்.

1975-76ம் ஆண்டில் காரைக்குடியில் நடைபெறும் விழாவிற்கு அவரும், அமரர் கா.அ.ச. இரகுநாயகரும், அமரர் சண்முக சுந்தரமும் நானும் சென்றிருந்தோம் விழா சிறப்பாக யிருந்தது.

அவருக்கு அதேபோன்று திருப்பத்தூரில் நடத்தவேண்டுமென்ற எண்ணம் வந்தது. எங்களிடம் கூறியபோது நாங்களும் 'சரி' என்றோம். கம்பன் கழகம் திருப்பத்தூரில் 1977ம் ஆண்டு துவக்கப்பட்டது.

தொடங்கியபோது 12 பேர்.

அமரர் கா.சு.ச. பத்மபநாபமுதலியார் அமரர். வி.ஆர். மாரிமுத்து செட்டியார், அமரர் சு. சண்முகசுந்தரம், திரு. சி. தண்டபாணி அமரர் கா.அ.ச. இரகு நாயகம், அமரர். எம். துரைசாமி செட்டியார், அமரர். டி.பி. தங்கவேல், தி. இரத்தின நடராசன், அமரர். கே.எஸ். பாலசுப்பிரமணியன், அமரர் எம். கார்த்திகேயன், அமரர் டி.கே. சந்திரசேகரன், செல்வி. துரை. இலக்குமி ஆகியோரைக் கொண்டு துவக்கப்பட்டது.

தொடக்க விழாவில் கம்பன் அடிப்பொடி சா. கணேசன் அவர்களே கலந்து கொண்டனர்.

தாய்வீட்டு சீதனமாக கம்பராமாயண நூலையும் அன்பளிப்பாக அளித்தார்.

அந்த நூலை, கம்பராமாயணத்தை யானையின் மீது வைத்து திருப்பத்தூர் முக்கிய வீதிகளில் ஊர்வலமாகக் கொண்டுவரப்பட்டது.

அவர் 1977 முதல் 1988 வரையிலும் கம்பன் கழகத்தின் தலைவராகவிருந்தார்.

விழா நடைபெறுவதற்கு இரண்டு மாதத்திற்கு முன்னரே ஏற்பாடுகள் தொடங்கிவிடும்.

விழாவிற்கு முந்திய நாள் அவரும், அவரின் தம்பி கா.அ.ச. இரகு நாயகன் அவர்களும், பிள்ளைகள் திருவாளர்கள் எஸ்.பி. மணவாளன், எஸ்.பி. திருமலை, எஸ்.பி. அச்சுதன் ஆகியோரும் மற்றவர்களும் இரவெல்லாம் ஏற்பாடுகள் செய்து முடிப்பதற்குள் விடிந்துவிடும் வீட்டிற்கு சென்று காலைக்கடன்களை முடித்துவிட்டு உடனடியாக வந்து விடுவோம்.

ஒரு சமயம், விழா நடக்கின்றபோது, மேடையில் பேசுகின்றபோது, தலைவர் கா.அ.ச. பத்பநாமன் அவர்கள், "முன்புபோல் உறுப்பினர்களின் ஈடுபாடில்லை. ஊக்கமும் உற்சாகமும் குறைந்து விட்டது. மேற்கொண்டு இதனை நடத்துவதைவிட, நிறுத்திவிடலாமா...' என்ற யோசனை உள்ளது என்று குறிப்பிட்டார்.

பின்னர் பேசுகின்றபோது, பிற உறுப்பினர்கள் சார்பில், 'நான் அவருக்கு எங்களின் முழு ஒத்துழைப்பு கிடைக்கும் என்றும், ஒருபோதும் நிறுத்தக்கூடாது என்றும் கேட்டுக் கொண்டேன்.

பின்னர் பேசிய திருச்சி பேராசிரியர் இராதாகிருஷ்ணன் அவர்கள், "எக்காரணத்தைக் கொண்டும் நிறுத்தக்கூடாது. நீங்கள் நிறுத்தினாலும், நான் ஆண்டுதோறும் வந்து கம்பனைப் பற்றி பேசுவேன், என்று குறிப்பிட்டார்.

'கம்பன் விழா' நடக்கின்றபோது ஊரே விழாக்கோலம் பூண்டிருக்கும். ஊர் பிரமுகர்கள் பொறுப்புகளையேற்று தாங்களாக முன்வந்து சிறப்பாக ஒத்துழைப்பு நல்கினார்கள்.

இரண்டு நாளும் விருந்துகள் நடக்கும்.

தலைவர் கா.சு.ச. பத்மநாபன் அவர்களும், திரு. சி. கே.டி. திரு. நாராயணன் அவர்களும், அமரர் வி.ஆர். மாரிமுத்து செட்டியார் அவர்களும், அமரர் டாக்டர்.

கோபால் அவர்களும், வழக்குறைஞர் டி. பூபதி அவர்களும் அவர்களுடைய இல்லங்களிலேயே விருந்திற்கு ஏற்பாடு செய்வார்கள். நகரத்து வைசியர்களும், குங்குமம் ஜி. குமரேசன் அவர்களும் என்.வி.எஸ். மண்டபத்தில் ஏற்பாடு செய்வார்கள்.

போட்டிகள், கலை நிகழ்ச்சிகள், சொற்பொழிவுகள் போன்று பலவும் நடைபெற ஊக்கமும் உற்சாகமும் குறையாது மகிழ்ச்சியோடு அனைவரையும் அரவணைத்து சிறப்பாகப் பணியாற்றினார்.

அவரின் மறைவு பேரிழப்பாகும்.

அவரின் நூற்றாண்டு பிறந்த நாளை கம்பன் கழகத்தின் சார்பில் கொண்டாடுவதில் நாங்கள் பெருமிதமும், பேருவகையும் கொள்கிறோம்.

அவரால் தொடங்கப்பெற்ற 'கம்பன் கழகம்', தொடர்ந்து இலக்கிய வளர்ச்சிக்குத் தொண்டாற்றட்டும்.

வருங்காலச் சமுதாயம் உலக மகாகவி கவிச்சக்கரவர்த்தி கம்பனின் புகழைப் பரப்பட்டும்! தமிழனின் இனிமையை பிறரும் உணர்ந்திட பாடுபடட்டும்.

திருப்பத்துர் கம்பன் கழகத்தைத் தோற்றுவித்த அமரர் கா.அ.ச. சபத்மநாபன் அவர்கள் பிறந்த நூற்றாண்டில் அவர் செய்த அரும்பெரும் பணிகளை நினைவு கூர்ந்து, அவருக்கு நன்றி செலுத்துகின்றோம்.

அவரின் வழி நடந்து மேலும் கம்பனின் புகழைப் பரப்புவோம்.

**இரத்தின நடராசன்**
செயலாளர்

# திருப்பத்தூர் பெரியவர் கா.அ.சண்முகனார்

**தோற்றம்:**

திருப்பத்தூர் அருணாசல முதலியாருக்கு ஆண்மகவு இல்லை. அதற்காக அருந்தவம் செய்தார். குடி போற்றும் மகன் வேண்டி மடிப்பிச்சையேந்தினார். மாலவனை வேண்டினார். வேலனையும் விடவில்லை. பழனிக்குக் காவடி எடுத்தார். மூன்றாண்டுகள் கடந்த பின்னர் அருணாசல முதலியாரின் துணைவியார் முத்து வேடியம்மாள் நம் பெரியவரான ஷண்முகரை ஈன்றெடுத்தார். அவர் பிறந்தது 1885ஆம் ஆண்டு நவம்பர் 2ஆம் நாள் (பார்த்திப ஐப்பசி 18ந் தேதி) திங்கட்கிழமை. பூர நட்சத்திரம் கும்பலக்கினமாகும். அவருக்குப்பின் ஆண்மக்கள் இருவர் பெண்மக்கள் மூவர் பிறந்தனர்.

**இளமைக் கல்வி:**

ஷண்முகருக்கு ஐந்து ஆண்டு நிறைந்த பின்னர் பெற்றோர்கள் அவரைப் பள்ளியில் சேர்த்தனர். ஆஞ்சநேயர் கோயில் நாகப்ப நாயுடு திண்ணைப் பள்ளியில் ஷண்முகர் சில நாள் பயின்றார், மாரியம்மன் கோயில் பள்ளியில் சில ஆண்டுகள் படித்தார், பின்னர் சாமி செட்டித் தெருவில் அக்காலத்திலிருந்த கலியாணராமய்யர் பள்ளிக் கூடத்தில் சேர்ந்து படிக்கலானார். ஷண்முகருக்கு பத்து வயதானபோது,பிரைமரித் தேர்வு நடந்தது. அந்த தேர்வில் ஷண்முகர் ஆங்கிலத்தில் தேர்ச்சி பெறவில்லை. அடுத்த ஆண்டு, ஆங்கிலத் தேர்வுக்குச்

செல்லும் தருவாயில் ஷண்முகர் உடல் நலிவுற்றார். ஆங்கிலத்தின் இடையூறே ஷண்முகர் மேலும் படிக்கத் தடையாய் இருந்தது. ஷண்முகரின் பள்ளிப் படிப்பு அத்துடன் முடிவுற்றது.

**தமிழ்க்கல்வி :**

ஷண்முகர் தம்முடைய பதினேழாம் வயதில் ஆழ்வார்களின் அருட் பாடல்களைப் படித்துச் சுவைத்தார்.ஷண்முகருக்குப் பதினெட்டு வயதான போது, நல்லியாங்குளத்துப் பாகவதர் என்பவருடைய பாரதப் பிரசங்கத்தை கேட்க நேர்ந்தது. அந்தப் பேச்சில் இவர் மனம் ஈடுபட்டது. அவரைப் போலவே தாமும் படித்து அறிஞராக வேண்டும் என்னும் எண்ணம் இவருக்குத் தோன்றியது. திருப்பத்தூரில் அக்காலத்து வாழ்ந்திருந்த தமிழாசிரியர் ஆதியூர். திரு. க.குமாரசாமி முதலியார் என்பவரை நாடினார். இவருக்குப் பாரதம் சொல்லித்தர அவரும் உடன்பட்டார். பாரதம் கற்பிக்கும் முன்னர், "அருணகிரி அந்தாதி" என்னும் நூலை ஒரு வாரம் பாடம் நடத்தினார். இருபத்தொரு வெண்பாக்கள் சொல்லி முடிந்தன. ஷண்முகரும் அவற்றை மனப்பாடம் செய்துவிட்டார்.

முத்துவேடியம்மாள், தம்மகன் தமிழ் நூல்களைக் கற்க முனைந்திருக்கும் செய்தியை அறிந்தார். அது துறவிகள் படிப்பு என்று தவறாக எண்ணி அஞ்சி, ஷண்முகர் தமிழ் கற்பதைத் தடுத்து விட்டார். ஓராண்டு கழித்துக் குமாரசாமி முதலியார் ஷண்முகரைக் காண நேர்ந்த போது, தொடர்ந்து தமிழ் படிக்க வருமாறு அன்புடன் அழைத்தார், நைடதமும், நிகண்டும் சொல்லிக் கொடுத்தார். "அரிசமய தீபம்" என்ற நூலில் அறுபது பாடல்களையும் சொன்னார்.

அவரிடம் பாடம் கேட்பது அந்த அளவில் நின்றுவிட்டது. பின்னர், குமாரசாமி முதலியாரின் மகன் தமிழாசிரியர் திரு.ஆ.கு.முருகைய முதலியார் என்பவரிடம் ஷண்முகர் தொடர்ந்து பாடம் கேட்டார். குசேலோபாக்கியானம், திருவரங்கத்தந்தாதி, மீனாட்சி பிள்ளைத் தமிழ் ஆகிய மூன்று நூல்களையும் அவரிடம் பாடம் கேட்டார். ஷண்முகரின் இருபத்தொன்றாவது வயதுடன் பாடம் கேட்பது முடிந்தது.

**பொதுவாழ்வில் ஈடுபடுதல்:**

1915 ஆம் ஆண்டில் திருப்பத்தூரில் முதன் முதலாக பெஞ்ச் மாஜிஸ்ரேட் கோர்ட் ஏற்பட்டபோது, அப்போது இந்நகரில் துணையாட்சித் தலைவராக (Sub-Collector) இருந்த திரு.தாம்போ, ஐ.சி.எஸ் என்பவர், சண்முகரை ஒரு கௌரவ பெஞ்ச் மாஜிஸ்ரேட்டாக நியமித்தார். ஐந்து ஆண்டுகள் அப்பணியை ஆற்றிய பின்னர் 1920ல் ஷண்முகர் முதல்வகுப்பு பெஞ்ச் மாஜிஸ்ரேட்டாக நியமனம் பெற்றார்.

**ஜில்லா போர்டு, நகரமன்றம்:**

1924இல் அப்பதவியிலிருந்து விலகி ஜில்லா போர்டு அங்கனத்தினர் தேர்தலில் நின்று வெற்றிப் பெற்றார். 1927இல் திருப்பத்தூர் நகர மன்றத்திற்கு ஓர் உறுப்பினராக இவரை நியமித்தார்கள். அந்த ஆண்டிலேயே அம்மன்றத்தின் தலைவராக தேர்ந்தெடுக்கப்பட்டார். இவர் நகர் மன்றத் தலைவராக இருந்த காலத்தில், 1930ல், திருப்பத்தூர் நகரில் இரண்டாவது முறையாக 'பிளேக்' வந்தது. நகர மக்கள் பெரும்பாலோர் தங்கள் வீடுகளை காலி செய்து விட்டு வெளியூர் சென்றுவிட்டார்கள். பிளேக் நோயினால் பாதிக்கப்பட்ட இடங்களையும், வீடுகளையும் ஷண்முகர், நகர் மன்றத் தலைவர் என்ற முறையில் நேரில் சென்று பார்வையிட்டு வேண்டிய ஏற்பாடுகளை செய்து வருவார். மூன்று ஆண்டுகள் கழிந்த பின்னர், 1930 ல் மீண்டும் நகர மன்ற தேர்தலில் நின்று வெற்றிப் பெற்றார்.

**தாலுக்கா போர்டு:**

1930 ஆம் ஆண்டில் முதல் திருப்பத்தூர் தாலுக்கா போர்டில் அங்கம் வகித்து வந்தார், 1933 ல் அந்த போர்டுக்கு தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பட்டார், அந்த ஆண்டிலேயே ஜில்லா போர்டு தேர்தலிலும் நின்று வெற்றிப் பெற்றார். 1936ஆம் ஆண்டுடன் ஜில்லா போர்டு உறவு முடிந்தது.

**காந்தியடிகள் தரிசனம்:**

1927 இல் காந்தியடிகள் கஸ்தூரிபாவுடன் குடியேற்றம் விஜயம் செய்திருந்தார், நகராட்சி பயணிகள் விடுதியில்

தங்கி இருந்தார். ஷண்முகர் அப்போது அங்குச் சென்று முதன்முதலாகக் காந்தியடிகளைச் சந்தித்து மாலை அணிவித்து வணங்கினார்.

இங்கு ஒன்றைக் குறிப்பிட்டாக வேண்டும். அண்ணல் காந்தியடிகள் மீது ஆழங்காண முடியாத பற்றும் பக்தியும் கொண்டவர் நம் ஷண்முகர்.

இவர் தமது மணிவிழா நினைவாக காந்தி கட்டிட நிர்மாண அறக்கட்டளை நிறுவினார். அதற்காக, இரயில்வே ரோட்டிலுள்ள தனது (சுமார் 0.80 சென்ட்) இடத்தை தானமாக கொடுத்தார். காந்தியடிகளின் கொள்கைகளைக் பரப்ப கால்கோள் செய்யுமுகத்தான் இலவச திருமணம், நூற்பு வேள்வி, இந்து கலாச்சார பிரச்சாரம் போன்றவை நிகழ ஏற்பாடு செய்தார். திருப்பத்தூரின் திருமுகம் போலுள்ள அந்த இடத்தின் இன்றைய மதிப்பு சுமார் இரு கோடி ரூபாய் ஆகும்.

ஷண்முகர் திருப்பத்தூர் நகராட்சி மன்றத்தின் தலைவராக இருந்த போது, சுமார் 21.9.29 இல் ஒரு நாள் திருப்பத்தூர் துணை ஆட்சித் தலைவர் திரு. இராமச்சந்திரன், ஐ.சி.எஸ். அவர்கள் ஷண்முகரைத் தம்மிடம் வருமாறு அழைத்தார். ஷண்முகரும் அவ்வாறே அன்று மாலை துணையாட்சித் தலைவரின் அலுவலகத்திற்கு சென்றார்.துணையாட்சித் தலைவர் அப்போது நகர் மன்றத்தின் நிருவாக விஷயங்களைப் பற்றி ஷண்முரிடம் பேசிய பின்னர், காந்தியடிகளைப் பற்றி பேசினார். "காந்தி நாட்டில் பிரிட்டிஷ் அரசாட்சிக்கு விரோதமாகக் பிரச்சாரம் செய்து வருகிறார். இராஜங்கத்திக்கு விரோதமாகக் கிளர்ச்சி செய்யும்படி மக்களைத் தூண்டி விடுகிறார். அவர் செய்வது இராஜதுரோகம் ஆகும். அவரை மக்கள் ஆதரிக்கக் கூடாது. 'அவருக்கு எதிர்ப்பாக இராஜங்கத்தை ஆதரித்து அங்கங்கேயுள்ள பெரிய மனிதர்களைக் கொண்டு மக்களிடம் பிரச்சாரம் செய்யவேண்டும்' என்று அரசாங்கம் உத்தரவு அனுப்பியிருக்கிறது. நீங்கள் இந்த ஊரின் சேர்மனாக இருப்பதால், அரசாங்க உத்திரவிற்கினங்க அவ்வாறு பிரச்சாரம் செய்ய வேண்டும்" என்று திரு.இராமச்சந்திரன் சொன்னார்.

அதற்கு ஷண்முகர், “அது தம்மால் இயலாது” என்று நயமாக பதில் சொன்னார். “ஏன்?” . என்று துணையாட்சித் தலைவர் கேட்டார். ஷண்முகர், “காந்திஜியை நான் தெய்வமாக நினைக்கிறேன், அவர் மக்களுக்கு தீமையான எதையும் செய்ய மாட்டார். மக்களுக்கு நன்மை செய்பவரை இராஜங்க துரோகம் செய்பவராக எண்ணக்கூடாது” என்றார். அப்போது துணையாட்சித் தலைவர், “அரசாங்க உத்திரவுப்படி நீங்கள் செய்தாக வேண்டும். நீங்கள் ஒரு முனிசிபல் சேர்மன் என்பதை மறந்துவிட முடியாது.” என்று அதிகார தோரணையோடு சொன்னார். ஷண்முகர், “துரை அவர்கள் மன்னிக்க வேண்டும், என்னால் செய்ய முடியாததை வற்புறுத்தாதீர்கள்” என்று பணிவாகக் கேட்டுக்கொண்டார். “அப்படியானால் உங்கள் சேர்மன் பதவியை ராஜினாமா செய்து விடுங்கள்,” என்று துணையாட்சித் தலைவர் சொன்னார். “சரி” அப்படியே செய்து விடுகிறேன் என்று ஷண்முகர் விடைப்பெற்று திரும்பினார். அதைப் பற்றித் துணையாட்சித் தலைவர் மீண்டும் கேட்கவுமில்லை. ஷண்முகர் தம் பதவியை ராஜினாமா செய்யவுமில்லை. எப்போதும் போல அவர் அதன் பின்னரும் ஷண்முகரிடம் சுமூகமாகவே பழகினார்.

**சட்ட மன்றம்:**

1937 ஆம் ஆண்டில், சென்னை மாநிலச் சட்டப் பேரவைக்கு காங்கிரஸ் கட்சியின் சார்பில் ஷண்முகர் வேட்பாளராக நிறுத்தப்பட்டார். பீபிள்ஸ் பார்ட்டி, ஜஸ்டிஸ் பார்ட்டி ஆகிய இரு கட்சிகளும் இத்தொகுதியில் போட்டியிட்டன. மும்முனைப் போட்டியினால், தேர்தல் விறுவிறுப்பாக நடந்தது. மூன்று மாதங்களுக்குத் தேர்தல் வேலைகள் நடைபெற்றன. இறுதியில் பெருவாரியான வாக்குகள் பெற்று வெற்றியடைந்தார். நாட்டில் அரசியல் கொந்தளிப்புக் காரணமாக 1939 இல் சென்னை மாநிலச் சட்டப் பேரவை கலைக்கப்பட்டபோது, இவர்தம் எம்.எல்.ஏ. பதவி காலம் முடிந்தது.

**குலப்பணி:**

இவர் தோன்றிய செங்குந்த குலமக்களின் முன்னேற்றத்தில் இவர் இளமை முதல் 2 ஆர்வம் காட்டி வந்துள்ளார். இந்த இனத்தினர் பெரும்பாலோர் ஏழைகள், நெய்தல் தொழிலை

மேற்கொண்டு வாழ்பவர்கள். தறி நெய்கின்றவர்களுக்கு நூல் கொடுத்துச் சேலை வாங்கி வாணிபம் செய்வது இவர் குடும்பத் தொழிலாகையால், அவர்களுடன் இவருக்கு நெருங்கிய தொடர்பு ஏற்பட வாய்ப்பு உண்டானது. 1934இல் திருவாரூரில் நடைபெற்ற செங்குந்தர் மாநாட்டில், வர்த்தக மாநாட்டுத் திறப்பாளராகவும் 1937ல் மதுரையில் கூடிய செங்குந்தர் மாநாட்டு தலைவராகவும், 1955ல் திருச்செங்கோட்டில் கூடிய செங்குந்தர் சமூக மாநாட்டின் தலைவராகவும் இவர் பங்கேற்றார். திருவாரூர் திரு.தி.நா. சபாபதி முதலியாருக்குப் பின், 1955ம் ஆண்டு முதல் தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் தலைமைப் பொறுப்பை ஏற்றார். 1976 வரை தொடர்ந்து சுமார் இருபத்து ஓர் ஆண்டுகள் அதன் தலைவராக இருந்து பணியாற்றினார்.

**வள்ளல் சபாபதி மாணவர் இல்லம்:**

இவர் தலைவராக இருந்த சமயம் தான் தற்போது வள்ளல் சபாபதி மெட்ரிக் பள்ளி நடைபெற்றுவரும் காலியிடத்தை தமிழகத்தின் பல்வேறு மாவட்டங்களில் இருந்து நம் சமுதாய மாணவர்கள் சென்னையில் தங்கி உயர்கல்வி பயிலுவதற்கு வசதியாக மாணவர்கள் இல்லம் கட்டுவதற்கு காஞ்சி மணிமொழியார் அவர்களின் முயற்சியால் அறிஞர் அண்ணா அவர்களால் திராவிட முன்னேற்ற கழக அறக்கட்டளைக்கு சொந்தமான இடத்தை 1960ல் சங்கத்திற்காக வாங்கப்பட்டது. பின்னர் இவர் தலைவராக இருந்த காலத்திலேயே மாணவர் இல்லம் கட்டுமான பணிகள் துவங்கி நடைபெற்றன. மாணவர் இல்லத்துக்காக தனது பங்காக ரூபாய் 5000 நன்கொடை அளித்ததோடு அந்நிதிக்குப் பெரும் பொருள் சேர்த்தும் கொடுத்தார்.

**குடியேற்றம் திருமகள் நூற்பாலை மற்றும் திருமகள் ஆலை அரசினர் கலை, அறிவியல் கல்லூரி:**

பெரியவர் சண்முகனாரின் பொதுத் தொண்டுக்கு மகுடமாய் இருந்தது குடியேற்றம் திருமகள் நூற்பாலையை நிறுவியது. குடியேற்றம் திருமகள் நூற்பாலையைத் தோற்றுவித்ததுடன் சண்முகர் திருமகள் மில்லின் நிருவாகத் தலைவராக முப்பது ஆண்டுகள் பணியாற்றினார். 1935 முதல் 1965 வரை

அவரது வாழ்க்கை திருமகள் மில்லின் வளர்ச்சியோடு ஒன்றி விட்டிருந்தது.

1964ல் திருமகள் நுற்பாலை சார்பாக காலிஇடமும் ரூபாய் ஐந்து லட்சம் அரசிடம் நன்கொடையாக அளித்து திருமகள் ஆலை அரசினர் கலை மற்றும் அறிவியல் கல்லூரி துவங்கப்பட்டது.

**கவிதை நூலாசிரியர் மற்றும் கல்வி நன்கொடைகள்:**

ஷண்முகர் சமானமில்லா கவிஞருங்கூட. நளாயினி வெண்பா, திருமால் போற்றி அகவல், இராமன் புகழ் அறுபது, திருமால் அவதாரம், திருவேங்கட மாலை, நூற்றெட்டுத் திருப்பதி போற்றி அகவல், திருமால் வெண்பா மாலை, இராகவன் புகழ்மாலை, திருவேங்கடப் பெருமான் திருப்பள்ளியெழுச்சி, சூடிக்கொடுத்த சுடர்க்கொடி, திருமால் அருச்சனை நூல், புத்தாண்டு (வாழ்த்துக்கள் முதலியன அவரது கைவண்ணத்தில் விளைந்த கவிதை நூல்களாகும்.)

திருக்கோயில்கள் எழுப்புவதற்கு அளித்த நன்கொடை ஓர் அளவில் நில்லாது. கல்வி நன்கொடைகளும் அதேபோல்தான். சான்றாக குடியேற்றம் பள்ளிகளுக்கும், திருப்பத்தூர் அதனை சுற்றியுள்ள பள்ளிகளுக்கும் வகுப்பறைகள் கட்டுவதற்கு நன்கொடை அளித்தும், திருப்பத்தூர் நகராட்சி ஸ்ரீராமநிலையம் துவக்கப்பள்ளிக்கு மாடி கட்டிடத்தை நன்கொடையாக அளித்துள்ளார்.

**மு.வ. நோக்கில் ஷண்முகர்:**

1945ல் ஷண்முகரின் மணிவிழா கொண்டாடியபோது, டாக்டர். மு.வ. அவர்கள் எழுதிய வாழ்த்துரையின் பகுதி வருமாறு

பணமே பெரிதெனும் பாசமும் இன்றிப்
புகழே பெரிதெனும் பொய்மையும் இன்றிக்
கல்வியே பெரிதெனும் கருத்தே மலர்ந்த(து),
ஒழுக்கமே விழுப்பமென் றொளியும் பெற்றது
தொண்டே நன்றெனும் தெளிவும் கண்ட(து)
இயைந்த இவ் வாழ்வின் இனிமே பயின்றே

| | | | |
|---|---|---|---|
| நீவீர் | பண்படும் | நீர்மையும் | பெற்றீர் |
| இத்தகைப் | பேறுதான் | இனியும் | பல்லாண்(டு) |
| உமக்குள | வாகுக | உயிர்வெல்லாம் | பெறவே |

**திரு.வி.க நோக்கில் ஷண்முகர்:**

தமிழ்ப் பெரியார் திரு.வி.க. அவர்கள் "அறிஞர் முதலியார் வாழ்க்கை வெற்றியுடையது. எப்படி? அவர்தம் வாழ்க்கையில் கல்விச் செல்வம், பொருட்செல்வம், சேய்ச் செல்வம், பணிச்செல்வம் முதலியன பூத்துள்ளன. 'திருமகள் ஆலை' என்னும் ஓர் அமைப்பும் காய்த்திருக்கிறது. திரு. முதலியார் வாழ்க்கை பூவுடன் காயுடன் நிற்க்கவில்லை . அது கனிகளை ஈனுகிறது!" என்றும் புகழ்கிறார்.

இவ்வாறு பூவும், காயும், கனியும் ஈந்து ஷண்முகரின் வாழ்க்கை நாட்டகத்தே நிற்கும் ஒரு நன்மரமாக விளங்குவதாகும்.

"திரு.ஷண்முக முதலியார், திரு. கா. அருணாச்சல முதலியாரும், திருமதி முத்து வேடியம்மாளும் அன்பால் ஒன்றி நடத்திய அற வாழ்க்கையினின்றும் முகிழ்த்த தவச் சேய், தமிழ் மகவு, செங்குந்த செம்மல், திருப்பத்தூர் தீபம், அரசியல் அடைவு, அறிவுத் தெளிவு" என்றும் புகழ்வர் அறிஞர் திரு.வி.க.

ஷண்முகரின் மாபெரும் வாழ்வு 1978 ஆம் ஆண்டு ஜூலை மாதம் 17ம் நாள் (காளயுத்தி 2 ஆண்டு, ஆடி மாதம், முதல் நாள்) திங்கட்கிழமை காலை 7.40 அளவில் முடிவுற்றது. ஷண்முகர் இப்பூவுலகில் 93 ஆண்டுகள் வாழ்வாங்கு வாழ்ந்து மறைந்தார்.

**வழித்தோன்றோர்களின் சமுதாய பணி!**

பெரியவர் சண்முகனாரை தொடர்ந்து அவர்தம் திருமகனார் அமரர் கா.அ.ஷ. பத்மநாபன் அவர்கள் வடாற்காடு மாவட்ட சங்கத் தலைவராகவும், தலைமைச் சங்க மண்டல செயலாளராகவும் சமுதாய தொண்டாற்றினார்.

தற்போது பெரியவர் சண்முகனாரின் பேரன்களில் திரு.எஸ்.பி. மணவாளன் (மேனாள் சட்டமன்ற உறுப்பினர்)

வேலூர் மேற்கு மாவட்ட செங்குந்த மகாஜன சங்க தலைவராக (201113) சிறப்பாக செயலாற்றினார். திரு.எஸ்.பி. திருமலை திருப்பத்தூர் நகர செங்குந்தர் சங்க தலைவராகவும் செங்குந்தர் கல்வி அறக்கட்டளை தலைவராகவும் செயலாற்றி வருகிறார். திரு.எஸ்.பி. அச்சுதன் செங்குந்தர் கல்வி அறக்கட்டளை உறுப்பினராகவும் இருக்கிறார். மூவரும் 3 சமுதாய தொண்டினை தொடர்ந்து சிறப்பாக செய்து வருகிறார்கள்.

**ஓங்குக சண்முகனார் புகழ்!!**

# கவி வானில் கம்ப துருவ நட்சத்திரம்

கன்னித் தமிழ் வானில்
ஆயிரமாயிரம்
கவி விண்மீன்கள்
அக் கவிவிண்மீன்களில்
துல்லியமாய்
பிரகாசிப்பது
கம்ப துருவ நட்சத்திரம்;

அதன்
ஒளிச்சிதறல்களை
சொற்படம்
பிடித்துக்காட்ட
கவி தொலை நோக்கிகள்
பேச்சாள் புகைப்படக் கருவிகள்
வார்த்தை நடிகர்கள் மூலம்
நமது
நெஞ்சத்திரையில்
நடமாட விடுகிறார்கள்.

'தொன்று நிகழ்ந்ததனைத்தும்
உணர்ந்திடும்
சூழ்கலைவாணர்களும்
என்று பிறந்தவளாம்

என்றுணராத

இயல்பினளாம்
எங்கள் தாய்,
பாடினான் பாரதி.

விடை சொன்னாள்
கவிப்புதல்வன்
பாவேந்தன்
பாரதிதாசன்

'திங்களொடும்
செழும்பரிதி தன்னோடும்
விண்ணோடும்
மங்குல்கடல் இவற்றோடு
பிறந்த தமிழுடன்
பிறந்தோம் நாங்கள்!'

இத்தமிழ் தலைக்காவிரி
தொல்காப்பியக் குடகில்
தோன்றி
எட்டுத்தொகை,
பதினெண்கீழ்க் கணக்கு
பாகமண்டலாவில்

அடியெடுத்து வைத்து
ஐம்பெரும் காப்பியங்களில்
சங்கமமாகி
கம்ப இராமாயண
பிருந்தாவனமாய்த் திகழ்ந்து
நெளிந்து, மெலிந்து, நலிந்து
காவேரி பாரதியாய்
கொள்ளிட பாரதியாய்
கொள்ளிட பாரதிதாசனாய்
பிறமொழி புகலினால்
தமிழ் புதாராய் மறையாமல்
காவிரி கடலோடு
கலக்காமல், கலங்காமல்
அழியாமல், அழகு மாறாமல்
சிதையாமல், சிறப்பு குன்றாமல்

தமிழரின்
நெஞ்சத்தரணியை என்றும்
வளமுடையதாக
வலிமையுடையதாக்கும்.

தமிழே!
நீ வாழி! நீடுழி வாழி!

உம்மைக் காக்கும்
போற்றும், வளர்க்கும்
கருத்துமழை பொழியும்
கவிமேகங்கள்
பேச்சாளத்
தென்மேற்கு காற்றுகள்
நாள்தோறும்
அயராது பணி செய்கின்றன.

பூக்கின்ற பூக்களெல்லாம்
பூக்களல்ல சூடுவதற்கு.
காய்க்கின்ற காய்களெல்லாம்
காய்களல்ல சுவைப்பதற்கு.
ஓடுகின்ற நீரெல்லாம்
நீரல்ல பருகுவதற்கு...

ஆனால்....
அப்பூக்களும், காய்களும், நீரும்
பார்வைக்குத்தான்
என்ன இன்பம்! என்ன இன்பம்?

அவையே பயன்தரு
காமதேனுவாய்
கற்பக விருட்சமாய்
தோன்றும்போது
எல்லையில்லா இன்பம்!

யாப்பில்லா பாக்களெல்லாம்
பாக்களில்லை
எதுகையில்லா பாடலெல்லாம்
பாதுகைகளே

மோனையில்லா பாடலெல்லாம்
சேனையில்லா நாடுகளே,
என்போர் பலர்.

இன்று
யாப்பு காதணிகள்
எதுகை மூக்கணிகள்
மோனை இடையணிகள்
அணிந்து கம்பக் குமரியையும்
ரசிக்கின்றோம்.

யாப்பு காதணியில்லா
யதுகை மூக்கணியில்லா
மோனை இடையணியில்லா
புதுக்கவிதை
கன்னியையும்
ரசிக்கின்றோம்.

தமிழ் கூறு நல்லுலகில்
தமிழ்வானில்
கம்ப வானவில் காட்டும்
எழு வர்ண சகோதர
பாத்திரங்கள்
அற்புதம்... அற்புதம்.

அதோ செவ்வானம்
பசுமை வயல்கள்,
கனிதரு சோலைகள்,
அகிலும், தேக்கும், சந்தனமும்
கமுகும், பாக்கும் மணக்கும்
காடுகள்
நீரூற்றுக்கள், ஓடைகள்
இசைபாடும் பறவைகள்
ஓலமிடும் விலங்குகள்

ஒளிமிகு வாகனங்கள்
திரைப்படங்கள்

ஒளிபரப்பு காட்சிகள்
வண்ண விளக்குகள்

எழில் பூங்காக்கள்
வான் முட்டும் கோபுரங்கள்
அடடா என்ன இன்பம்!

ஆனால்
தேடுகிறேன்
தேடிக் கொண்டேயிருக்கிறேன்

இறைமை
தோழமை
பகையின்மை
ஒழுக்கம்
கடமை
நன்றி
நகை

இவை அனைத்தையும்
காண்கிறோம் எங்கே...?
கம்பன் காவியச் சுரங்கத்தில்.

இராம காவிய கொற்கையில்
அறிவு மூச்சுப்பிடித்து மூழ்கி
கருத்து முத்துக்களை
அறிஞர்
வாரி வழங்குகின்றனர்.

இச்சுனை நீரினை
பருகுவோம்
பரவசமடைவோம்
பரப்புவோம்.

# கம்பனின் சமுதாயப் புரட்சி

"கம்பன் ஒரு புரட்சிக்கவிஞன்"

எதற்காக இத்தகைய தலைப்பு கொடுக்கப்பட்டுள்ளது? ஆங்கிலத்தில் "Old wine in a new bottle' என்றும், தமிழில் புதிய மொந்தையில் பழைய கள்" என்றும் குறிப்பிடுவர்.

அதே போன்றுதான், இங்கு ஒரு புதிய தலைப்பு கொடுக்கப் பட்டுள்ளது. சொல்லவிருக்கின்ற கருத்துக்கள் ஏற்கெனவே சொல்லப்பட்டவைகள் என்றாலும் புதிய கோணத்தில், புதிய தலைப்பில் சொல்லப்படவிருக்கின்றது.

ஆனந்த விகடனில் பல ஆண்டுகளுக்கு முன்னால் 'ஒகேனக்கல் நீர்வீழ்ச்சி குறித்து ஒரு அழகிய கட்டுரை வெளி யிடப்பட்டது. ஆனால் சில மாதங்களுக்கு முன்னால் 'புடவை தலைப்பில் மீன்கள்' என்ற ஒரு கட்டுரை வந்தது.

அதைப் படித்துப் பார்த்தபோது, அது ஒகேனக்கல் நீர்! வீழ்ச்சியைப் பற்றி மிக அழகாக குறிப்பிட்டிருந்தது.

கால வெள்ளத்தில் மனிதனின் போக்கும் நோக்கும் மாறுகின்றன. அதற்கேற்ப சொல்பவரும் மாற வேண்டும். எனவேதான் இப்புதிய முயற்சி.

**முதலில்**
**மனிதனைப் பற்றி**
**பின்னர் கவிஞனைப் பற்றி**

**அதற்குப் பின்னர் புரட்சிக் கவிஞனைப் பற்றி தகவல் அதனையடுத்து கம்பனைக் குறித்து..**

**இறுதியாக சமுதாயப்புரட்சி இப்படி ஒவ்வொன்றாக நாம் ஆய்ந்து பார்க்கவிருக்கின்றோம்.**

மனிதன் யார், கவிஞன் யார் என்று வேறு படுத்திக் காட்டுகின்ற போது, ஒரு அறிஞர்

**"மனிதன் பார்க்கிறான்,**
**விஞ்ஞானி உற்றுப் பார்க்கிறான்; ஆனால்**
**கவிஞன் ஊடுருவிப் பார்க்கிறான்**

என்று குறிப்பிடுகின்றார்.

இக்கூற்று உண்மை என்பதனை பிரான்சு நாட்டில் 1869ல் வாழ்ந்த ஜூல்வெர்னி என்பவர் 'நிலவுப் பயணம்' என்ற நூலில் எழுதுகின்றார்.

அந்நூல் ஒரு விஞ்ஞானியிடத்தில் கிடைக்கின்றது. அவர் அதனைப் படித்தவுடன், புதிய முயற்சியில் ஈடுபடுகின்றார்.

அக்கட்டுரையில் குறிப்பிட்டுள்ள இடத்திலிருந்தே அவரால் கண்டுபிடிக்கப்பட்டுள்ள ராக்கெட் மூலம் மனிதன் நிலவுலகிற்குப் பயணமாகிறான். பின்னர், தனது பயணத்தை முடித்துக் கொண்டு அந்நூலில் குறிப்பிட்டுள்ளவாறே, அதே இடத்தில் வந்திறங்குகிறான்.

எனவே, இங்கு கவிஞனின் செயல்தான் விஞ்ஞானிக்கு கருப்பொருளாக அமைகிறது. கவி ஏன் 'ஊடுருவிப் பார்க்கிறான்' என்பது, எவ்வளவு பொருத்தமாக அமைந்திருக் கிறது என்பதை நாம் நன்கு உணர்கிறோம்.

கவிஞன்... ஆம் ....... கவிஞன் என்றால் யார்?

இக்கேள்வி எழுவது இயற்கை.

ஆனால் அதற்கு முன்னர், கவிதை என்றால் என்ன என்று அறிய விரும்புவோரும் உள்ளனர்.

"வண்ணக்கனவுகளையெல்லாம்

எண்ண ஊற்றுக்களையெல்லாம்

வடித்துக்காட்டுகின்ற வரலாற்றுத் துளிகள்'' தான் கவிதை என்பார் வால்டேர் என்ற பிரெஞ்சு அறிஞர்.

'சிறந்த சொற்களை சிறந்த முறையில் அமைப்பது தான் கவிதை' என்பார் எ.சி. பிராட்லே.

இவரின் கூற்றுப்படி பார்த்தால், 'முள்ளு முனைமேலே மூணு குளம் வெட்டினேன்; அதில் இரண்டு குளம் பாழ்; ஒண்ணில் தண்ணியே இல்லை...' என்பது ஒரு கவிதையா என்ற கேள்வி எழும்.

சிறந்த சொற்கள் தேவைதான்.

அவற்றைச் சிறந்த முறையில் அமைக்க வேண்டியதும் இன்றியமையாத ஒன்றாகும்.

வோர்ட்ஸ்வொர்த் என்ற ஆங்கிலக் கவிஞன் 'குக்கூ' என்ற பறவையைக் குறித்து கவிதை பாடியபோது, அதற்கு ஒரு அடைமொழி கொடுக்க விரும்பினான். ஆனால் எளிதில் கிடைக்கவில்லை.

நாற்பத்து மூன்று ஆண்டுகளுக்குப் பிறகு, 'அலைந்து திரியும் பறவை' (The Wandering Voice) என்ற சொற்களைத் தேர்ந்தெடுத்து, பொருத்தி, மகிழ்ந்தான்.

கவிதைக்கு பலர் பலவிதமாக இலக்கணம் கூறினாலும் கவிஞர் மில்டன் கூறிய இலக்கணம் மிகவும் பொருந்தக் \ கூடியதாக இருக்கின்றது.

'கவிதை என்பது தனது மன அறிவினின்று வடித்து இறக்கப்பட்ட தூய அமிழ்தமாகும்' என்கிறார்.

இன்று நாம் 'கம்பனை' ஏற்றிப் போற்றுகிறோம் என்று சொன்னால், அவரை உலக மகாகவி என்றும், கவிச் சக்கரவர்த்தி என்றும் உயர்வாக அழைக்கிறோமென்றால், அதற்குக் காரணம் கம்பன், தனது 'மனஅறிவினின்று வடித்து இறக்கப்பட்ட தூய அமிழ்தம்தான் இராம காவியம்.'

புரட்சிக் கவிஞன் என்றால் யார்?

புரட்சிக் கவிஞன் என்பவன் பழமைச் சாயலின் பிரதிபலிப்பல்ல. மக்களுடைய எண்ணங்களை, எழுச்சிகளை,

நேரத்தில், அவனது வாழ்க்கைத் தரம் உயரவில்லையே என்று மனம் நோகின்ற காட்சியைக் காணுகின்றோம்.

**பாடுபடுவது, உழைப்பது பலர்; ஆனால்**
**பயனை அனுபவிப்பதோ சிலர்.**

பாரதிதாசன் ஒரு தொழிலாளியைப் பார்க்கிறார். அவருக்கு அவனுடைய வளைந்த உருவம் வில்லினை நினைவுப்படுத்து கின்றது.

'...ஓடாய்ப் போனோம் வறுமைக்கே உறவாய்ப் போனோம்' என்பதில் சோகத்தின் சாயல் நன்கு படம் பிடித்துக் காட்டப்படுகின்றது.

புரட்சியின் உச்சிக்கே நம்மை அழைத்துச் செல்கிறார் மற்றோர் இடத்தில்.

**"ஓடப்பராயிருக்கும் ஏழையப்பர்**
**உதையப்பர் ஆகிவிட்டால்**
**ஒரு நொடிக்குள்**
**ஓடப்பர், உயரப்பர் எல்லாம் மாறி**
**ஒப்பப்பர் ஆகிடுவர் உணரப்பா நீ"**

எனும் கவிதையில் அவருடைய மனக்குமுறலை, சமுதாயம் மாற வேண்டுமென்றால், அதற்குரிய மாமருந்தினை அவர் தெள்ளத் தெளிவாக எடுத்தியம்புகிறார்.

மணியன் 'இதயம் பேசுகிறது' என்ற வார இதழின் ஆசிரியர். பயணக் கட்டுரைகள் எழுதுவதில் தனக்கென ஒரு முத்திரையைப் பதித்தவர்.

அவர் ஜெர்மனிக்குச் சென்றிருந்த போது, டாக்சியில் பயணம் செய்கிறார். டோக்சி டிரைவரிடம் பேசிக் கொண்டிருந்தபோது, அவர் சென்னைக்கு வந்திருக்கிறார் என்பதையறிந்து, சென்னையில் அவரை கவர்ந்தது எது, என்று கேட்கிறார்.

'சென்னையில் ஆயிரக்கணக்கில் மக்கள் நடைபாதையில் வாழ்கிறார்கள்; அதே நேரத்தில் விலையுயர்ந்த கார்களில் மக்கள் செல்வதையும் பார்க்கிறேன். ஏழைக்கும் பணக்கார ருக்கும் இருக்கின்ற இடைவெளி மிகுதி உங்கள் நாட்டில்,

நெகிழ்ச்சிகளைப் படம் பிடித்துக் காட்டும் ஓர் கா லக் கண்ணாடி.

இது அமெரிக்கக் கவிஞர் வால்ட்விட்மனின் விளக்கம்.

மற்றொரு புரட்சிக் கவிஞர் வேறு வகையில் விளக்கம் தருகிறார். காயம் பட்டவனைப் பார்க்கின்றபோது, எப்படி காயம் பட்டது என்று விசாரிப்பது கிடையாது; ஆனால் நானே காயம் பட்டவனாக மாறிவிடுகிறேன்'. ஆங்கில அகராதியில், புரட்சி என்ற வார்த்தைக்கு 'நிலையில், கருத்தில், முறையில், எண்ணத்தில் ஏற்படும் பரந்த அல்லது அடிப்படையான மாற்றம் எதுவோ, அது தான் புரட்சி', என்று விளக்கம் தரப்படுகின்றது.

எனவே, புரட்சிக்கவிஞர் பாரதிதாசன் ஏற்கெனவே சமுதாயம் இருந்த நிலையில், மக்களின் எண்ணத்தில், கவிஞர்கள் கொண்டிருந்த கருத்தில், ஒரு மாற்றத்தை ஏற்படுத்திய காரணத்தினால் பாரதிதாசன் அவர்களை *புரட்சிக்கவிஞன்' என்று சொல்வது மிகவும் பொருத்தமாக விருக்கின்றது என்பது புலப்படும்.

புரட்சிக்கவிஞர் இலக்கியத்திலும், சமுதாயத்திலும் நிகழ்த்திய மாற்றங்கள் மிகவும் போற்றுதற்குரியவை.

இலக்கியம் என்பது என்ன?

It is a social institution - அது ஒரு சமூக நிறுவனம். அதற்கு ஒரு மொழி தேவைப்படுகின்றது.

'வாழ்க்கை ' என்பது ஒரு 'Social Reality' சமூக உண்மை.

அதை நாம் ஏற்றுக்கொள்ள வேண்டும். வாழ்வுதான் இலக்கியமாக அமைகிறது. சமூக உண்மை, சமூக நிறுவனமாக உருப்பெறுகிறது.

இலக்கியத்தின் மூலமாக சமுதாயப் புரட்சிக்கு வித்திட்டவர் புதுவையிலே பிறந்து, வளர்ந்து ஆசிரியராகப் பணியாற்றி, மாபெரும் கவிஞராக பல இறவாத நூல்களைப் படைத்து, மறைந்த புரட்சிக்கவிஞரை இந்நாளில் நினைவு கூர்ந்து அவரின் பணிகளைப் பாராட்டுகின்றோம்.

பொருள் ஒன்றுதான்.

நல்ல குடும்பம் ஒரு பல்கலைக்கழகம் என்பர்.

தயரதன் குடும்பம் இதற்கு ஒரு நல்ல சிறந்த எடுத்துக்காட்டு.

அவர் ஒரு சிறந்த குடும்பத்தலைவன்.

அவருக்கு வாய்த்த மூன்று மனைவியரும் சிறந்த குணவதிகள்.

அதிலும் மூத்தவள் எவ்வாறு இருக்க வேண்டு மென்பதற்கு கோசலை ஒரு சிறந்த எடுத்துக்காட்டு.

அவருக்கு பிறந்த நான்கு பிள்ளைகளும் ஒவ்வொரு வகையில் சிறப்புடையவர்கள். ஆனால் எவரிடமும் ஆணவம் வெளிப்படவில்லை. கட்டுப்பாடு, பொறுமை, கீழ்ப்படிதல், இணைந்து செயல்படுதல், பிறரின் உயர்விலும், தாழ்விலும் சலிப்படையாது மகிழ்வுடன் அனைத்தையும் ஏற்றுக் கொள்வது போன்ற சிறந்த பண்புகளைப் பார்க்கலாம்.

ஒரு மனிதனிடத்தில் எவ்வளவு உயரிய பலங்களிருந்தாலும், ஒரு சிறு குறை அல்லது பலவீனம் இருந்தால் அச்சிறு குறையே அவர்களின் வாழ்வைத் தாழ்வுறச் செய்யும்.

தயரதன் கைகேயியின் மீது வைத்திருந்த அளவுக்கு மீறிய அன்புதான் அவரின் வீழ்ச்சிக்குக் காரணமாய் அமைந்தது.

சிறுவனாகயிருந்தபோது கூனியின் மனதை விளையாட்டாகப் புண்படுத்தியதால் தான் இராமன் பல்வேறு துன்பங்களுக்கு ஆளானார்.

சத்ருக்கன் அமைதி, பொறுமை ஆகியவற்றின் உறைவிடம்.

இலக்குமணன் ஒரு தம்பி அண்ணனிடம் எவ்வாறு நடந்து கொள்வதற்கு ஓர் இலக்கணம்.

தயரதன் குடும்பத்தில் எல்லோரும் விட்டுக்கொடுத்து, சுயநலமின்றி, குடும்ப நலன் ஒன்றே குறிக்கோள் என்று வாழ்ந்தவரையிலும் அந்த குடும்பம் ஒரு நல்ல குடும்பமாக இருந்தது.

எனவே, அவர் பெரிதும் மாறுபட்டிருக்கிறார் என்பதனை உணரலாம். மன்னரோடு நெருங்கிப் பழகினாலும், சமுதாயத்தின் போக்கினை, நிலையினை நன்கு உணர்ந்திருக்கிறார் என்பது தெரிகின்றது.

ஆங்கிலத்தில் 'Optimist' என்ற வார்த்தையுண்டு. 'அனைத்தும் நன்மைக்கே' என்று எண்ணுபவரை இவ்வாறு அழைப்பது வழக்கம், 'எவர் தடைகளெல்லாம் உடைத்தெறிந்து வாய்ப்புகளை ஏற்படுத்திக் கொண்டு உயர்ந்த நிலைக்குச் செல்கிறார்களோ, அவர்களை அத்தகையவர்கள்' என்று குறிப்பிடலாம்.

கம்பர் சொல்ல வேண்டியவற்றை, சொல்ல வேண்டிய முறையில் சிறந்த சொற்களை வைத்து, அவற்றின் மூலம் அழுத்தந்திருத்தமாக தனது கருத்துக்களை எடுத்துச் சொல்லுகிறார்.

# மனிதனும் தெய்வமாகலாம்

மனிதன் பறவையைப் போன்று பறக்கக் கற்றுக் கொண்டான்; ஆனால் மனிதர்களைப் போல் வாழக் கற்றுக் கொள்ளவில்லை' என்று டாக்டர் எஸ். இராதாகிருஷ்ணன் கூறுகிறார்.

**"மனிதர்கள் மிருகங்களாகி விடுகிறார்கள்**
**மனிதர்கள் மனிதர்களாக வாழ்கிறார்கள்**
**மனிதர்கள் தங்களது மேம்பட்ட செயல்களினால்**
**தெய்வ மாகவும் மாறுகிறார்கள்**
**விலங்குகள் கூட தங்களின் மேம்பட்ட**
**செயல்களினால் தெய்வங்களாகலாம்"**

இவை அனைத்தையும் கம்பர் இயற்றிய இராமாயணத்தில் காணலாம்.

இராவணன் அரக்கன். ஆனால் கல்வி கேள்விகளில் சிறந்து விளங்கி மனிதரைவிட மேலானவனாகத் திகழ்ந்தான். ஆனால் சீதையை சிறையிட்டு, அவள் மீது மோகம் கொண்டதின் காரணமாக தனது நிலையினின்று தாழ்ந்து மிருகமானான்.

பரதன், இலக்குவன் ஆகியோரும் மனிதர்கள்தான். ஆனால் ஒருபோதும் மனிதத்தன்மையிலிருந்து தாழ்ந்த நிலைக்குச் செல்லவில்லை. எப்போதும், எந்த நிலையிலும் ஆணவமும் கொள்ளவில்லை. உணர்ச்சிவசப்பட்டு மிருகத்தைப் போன்று நடந்து கொள்ளவுமில்லை.

## அமரர் கா.அ.ச. பத்மநாபன் அவர்கள்,
## கம்பன் கழக நிறுவனத்தலைவர்



கம்பன் கழகம்,

திருப்பத்தூர், வே.மா.

என்கிறார் ஷெல்லி. இவைகளை பிரதிபலிப்பவர்தான் கம்பர் அவர் ஒரு சிறந்த கவிஞர்.

ஒப்பில்லாத, ஈடில்லாத உயர் கவிஞர். தொலை நோக்குடையவர். கற்பனையில் மட்டுமே எப்போதும் மிதந்து கொண்டிருக்காமல், சமுதாயத்தைக் குறித்தும் தனது எழுத்துக்களில் வடிவம் தீட்டியவர்.

கவிதை நோக்கோடு, சமுதாய நோக்கும் இராமாயணத்தில் பலவிடங்களில் வற்புறுத்தப்படுகின்றன.

எனவே கருத்துச்சுவை, கவிதைச்சுவை ஆகியவை நிரம்பிய பெட்டகம் தான் இராமாயணம்.

# கம்பரின் கனவு

கனவு என்பது ஒவ்வொருவரும் பல நேரங்களில் காண்பது.

கனவு பலிக்காது என்பர் பலர்.

காலையில் காண்கின்ற கனவு பலிக்கும் என்பர் சிலர். கனவு என்பது ஒருவரது இலட்சியம்.

'கனவுகளை எண்ணங்களாக மாற்றுங்கள்; எண்ணங்களை செயல்களாக மாற்றங்கள்.' என்கிறார் குடியரசுத் தலைவர் அப்துல்கலாம்.

பெரிய மனிதர்கள் கனவு காண்கிறார்கள்.

அவற்றை இலட்சியங்களாக மாற்றுகிறார்கள்.

இலட்சியங்களை செயலாக்குகிறார்கள்

கவிஞர்கள் கனவு காண்கிறார்கள்

அவற்றிற்கு செயல் வடிவம் கொடுப்பவர்கள் ஆட்சி செலுத்துபவர்கள்.

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் வள்ளுவப் பெருந்தகை நாட்டில் பிச்சையெடுப்பவரே இருக்கக்கூடாது.

எங்கள் நாட்டில் இந்நிலை என்றும் இருந்தது கிடையாது' என்று அவர் கூறினார்.

மேலும் அவர் குறிப்பிடுகின்றபோது, இக்குறைபாடு களைக் களைய 'எங்கள் மக்கள் போராடுவார்கள்' என்று குறிப்பிட்டார்.

புரட்சிக்கவிஞர் நாளை வரவிருப்பதை இன்றே எடுத்துக் கூறி எச்சரிக்கிறார். 'ஒப்பப்பர்' என்ற நிலை உருவாக அனைவரும் பாடுபட வேண்டும்.

இதனைகம்பர் வாழ்ந்த காலத்தோடு ஒப்பிட்டுப் பார்க்கலாம்.

கம்பர் வாழ்ந்த காலம் கி.பி. 886 ஆம் ஆண்டு, 9ம் நூற்றாண்டு.

சேர, சோழ, பாண்டியர், பல்லவர் மாறி மாறி சிறப்பாக வாழ்ந்த காலம்.

அவர்கள் இடையே நிகழ்ந்த போர்கள் ஏராளம்.

சமயங்கள் எத்தனை?

ஆனால், கம்பர் ஒரு கற்பனையான அற்புதமான உலகத்தைப் படைக்கிறார்.

இரண்டாவதாக, வால்மீகி படைத்த ராமாயணத்திலிருந்து கருப்பொருளை மட்டிலும் எடுத்துக் கொண்டு, கம்பர் தனது கற்பனைப் பட்டறையில் வடித்தெடுத்த அற்புதச் சித்திரம் தான் இராமாயணம்.

மூன்றாவதாக, பெரும்பாலோர் இத்தகைய நூல்களைப் படைக்கின்றபோது, முதலிலேயே உட்பொருளைச் சொல்லி விடுவார்கள்.

ஷேக்ஸ்பியரின் நாடகங்களில் இதனைக் காணலாம்.

இளங்கோ அடிகள் தனது சிலப்பதிகாரத்தில் தொடக்கத்திலேயே கதையின் கருப்பொருளைக் கோடிட்டுக் காண்பிக் கின்றார்.

ஆனால் கம்பர் அதுபோன்று செய்யவில்லை.

# கவிதையும் கருத்தும்

கம்பன் ஒரு உலக மகா கவிஞன்.

அவர் இயற்றியது இராமாயணம்.

வால்மீகியால் இயற்றப்பட்ட இராமாயணம் வால்மீகி இராமாயணம் எனவும், துளசிதாசரால் இயற்றப்பட்ட இராமாயணம் துளசிதாசர் இராமாயணம் எனவும் அழைக்கப் படுகிறது.

அதேபோன்று கம்பரால் இயற்றப்பட்ட இராமாயணம் கம்ப இராமாயணம் என்றழைக்கப்படுகிறது.

நூல்கள் பலராலும் இரண்டு காரணங்களால் விரும்பப்படுகின்றன.

கவிதைச் சுவைக்காக சில நூல்கள் விரும்பப்படுகின்றன.

கருத்துச் சுவைக்காக சில நூல்கள் விரும்பப்படுகின்றன.

ஆனால் இரண்டிற்காகவும் வெகு சில நூல்களே விரும்பப்படுகின்றன. பாராட்டப்படுகின்றன.

அவற்றில் ஒன்று கம்ப இராமாயணம்.

கருத்துச்சுவை மிகுந்தது கம்ப இராமாயணம்.

அன்றும், இன்றும், என்றும் மக்களுக்கு எடுத்துக் காட்டாகவும் முன் மாதிரியாகவும் பின்பற்றக் கூடியதாகவும் பலவும் அமைந்துள்ளன.

**திண்மை இல்லை, நேர்செறுநர் இல்லாமையால்**
**உண்மை இல்லை, பொய் உரை இல்லாமையால்**
**வெண்மை இல்லை, பல்கேள்வி மேவலால்.**

என்கிறார்.

ஆங்கில எழுத்தாளர் ஜோனத்தன் ஸ்விப்ட் வாழ்ந்த காலத்திற்கு முன்பு வாழ்ந்தவர் கம்பர்..

அவர் எழுதிய 'உத்தோப்பியா' என்ற நூலக்கு முன்னர் கம்பராமாயணம் இயற்றப்பட்டது.

மொத்தம் 25 இராமாயணங்கள் உள்ளன.

தமிழில் 4 இராமாயணங்கள் உள்ளன.

இராமனையும் சீதையையும் அண்ணன் தங்கையாக குறிப்பிடும் இராமாயணமும் உண்டு.

இராவணனை இலங்கேஸ்வரனாகச் சித்திரிக்கும் இராமாயணமும் உண்டு.

இராவணனின் மகளாக சீதையைக்குறிப்பிடும் இராமாயணமும் உண்டு.

ஆனால் கம்பரைப்போல சமுதாயத்தை ஒரு ஒப்பற்ற சமுதாயமாகப் படைக்கவில்லை.

எல்லாரும் எல்லாப் பெருஞ்செல்வமும் எய்தலாலே இல்லாரும் இல்லை. உடையார்களும் இல்லை மா தோ என்கிறார் கம்பர்.

எல்லாரும் எல்லாப் பொருளையும் இயற்கையாகவே பெற்றுள்ளனர். எனவே, ஒன்றும் இல்லாதவர் ஒருவரும் இல்லை. இல்லாதவர் என்ற சொல்லே இல்லை. இல்லாதவர் என்ற சொல்லுக்கே இடமில்லை என்பதால், உடையார்கள் என்ற சொல் நிகழ்வதற்கும் இடம் இல்லை.

இத்தகைய அற்புதமான சமுதாயத்தைக் காண விரும்புகிறார் கம்பர், இது அவரின் கனவு.

கனவுகளை எண்ணங்களாக மாற்றி எண்ணங்களை செயல்களாக மாற்ற அனைவரும் பாடுபட வேண்டும்.

ஆனால் ஒவ்வொருவரும் ஒரு கோணத்தில் அதனைப் பார்க்கலாம்.

தமிழை பலர் பலவாறாகப் போற்றிப் பாடியுள்ளார்கள்.

புரட்சிக்கவிஞர் பாரதிதாசன் தமிழைப் பார்க்கும் விதமே வேறு.

திங்களோடும் செழும்பரிதி தன்னோடும் விண்ணோடும் உடுக்களோடும்

மங்குல் கடல் இவற்றுடன் பிறந்த தமிழுடன் பிறந்தோம் நாங்கள் என்று பாடுகையில் தமிழும் தமிழரும் எவ்வளவு பழமை வாய்ந்தது என்பதை உணரலாம்.

சமுதாயத்தைப் பார்க்கின்ற போதும் புதுமைக்கண் கொண்டு பார்க்கிறார்.

**"வீழ்ச்சியுறு தமிழகத்தில் எழுச்சி வேண்டும்**
**விசையொடிந்த தேகத்தில் வன்மை வேண்டும்**
**சூழ்ச்சிதனை பொறாமைதனை தொகையாக எதிர்நிறுத்தி தூள் தூளாக்கி**
**காழ்சிந்தை மறச் செயல்கள் மிகவும் வேண்டும்"**

என்று பாடுகையில் புரட்சியின் மூலம் ஒரு சமுதாயத்தை உருவாக்கவியலும் என்பதில் அவருக்குள்ள அசைக்க முடியாத நம்பிக்கை வெளிப்படுகிறது.

**"சிற்றூரும் வரப்பெடுத்த வயலும் ஆறுதேக்கிய நல்வாய்க்காலும் வகைப்படுத்தி**
**நெற்சேர உழுதுழுது பயன்விளைக்கும் நிறையுழைப்புத் தோள்களெல்லாம் எவரின் தோள்கள்**
**கற்பிளந்து மலைபிளந்து கனிகள் வெட்டி கருவியெலாம் செய்து தந்த கைதான் யார்கை?**
**பொற்றுகளை, கடல் முத்தை, மணிக்குலத்தைப் போய் எடுக்க அடக்கியவரின் மூச்சு எவரின் மூச்சு."**

என்று ஆவேசத்தோடு பாடுகின்ற போது சமுதாயத்தை உருவாக்க மனிதன் எவ்வாறெல்லாம் பாடுபட்டு மேம்படுத்தியிருக்கிறான் என்று குறிப்பிடுகின்ற அதே

அத்தகைய நிலையேற்படின், அவர்களைப் படைத்த ஆண்டவனே ஆனாலும் அவன் செத்து ஒழியட்டும் என்றார்.

**"இரந்தும் உயிர் வாழ்தல் வேண்டின்**
**பரந்துகெடுக உலகியற்றி யான்."**

அதற்குப் பிறகு சுமார் 150 ஆண்டுகளுக்கு முன்னால் வாழ்ந்த வள்ளலார் அணையாத அடுப்பினை மூட்டினார். இன்றும் அந்த அடுப்பு எரிகிறது.

வறியோருக்கு உணவு வழங்கப்படுகிறது.

மணிமேகலை அட்சயப் பாத்திரத்தினின்று பிறருக்கு வாரிவழங்கியதை மணிமேகலைக் காப்பியம் சொல்கிறது.

அனைவரையும் விட பாரதியார் பொங்கி எழுந்து கூறிய வார்த்தைகள் அனைவரின் கவனத்தையும் ஈர்த்தது.

**"தனி ஒருவனுக்கு உணவில்லையெனில்**
**இச்செகத்தினையே அழித்திடுவோம்" என்றார்.**

அவருக்குப் பிறகு வந்த அவரின் வழித்தோன்றல் பாரதிதாசனோ "ஒரு மனிதன் தேவைக்கே இத்தேசம் உண்டென்றால் அத்தேசம் அழிதல் நன்றாம்" என்றார்.

கி.பி. 2000 என்ற ஒரு நூலை டாக்டர் மு.வ. அவர்கள் எழுதியுள்ளார்.

வறுமை இல்லாத, அனைவரும் மகிழ்வோடு வாழுகின்ற ஒரு சமுதாயமாக படம் பிடித்துக் காட்டியுள்ளார். ப

'உத்தோப்பியா' என்ற ஒரு நூலை ஜோனத்தன் ஸ்விப்ட் என்பவர் ஆக்கியுள்ளார்.

சண்டை சச்சரவு இல்லாத, அனைவருக்கும் அனைத்தும் கிடைக்கக்கூடிய ஒரு சமுதாயத்தைப் படைத்திருக்கிறார்.

இவ்வாறு ஒவ்வொருவரும் தங்களின் எண்ணங்களுக்கு ஏற்ப புதிய சமுதாயத்தைப் படைத்திருக்கிறார்கள்.

கம்பர் கம்பராமாயணத்தில் படைத்திருக்கும் சமுதாயம் அற்புதமான சமுதாயம்.

**வண்மை இல்லை, ஓர் வறுமை இன்மையால்**

ஆனால் சுயநலன் என்ற பேய் கைகேயியின் மனதில் குடியேறிய போது, மகிழ்ச்சி வீட்டைவிட்டு வெளியேறி விட்டது.

துன்பம், கண்ணீர், அமைதியின்மை அவ்வீட்டை ஆக்ரமித்துக் கொண்டன.

நிகழ்ந்த செயலுக்காக தந்தையை நொந்து கொள்ளாமல், அளிக்கப்பட்ட தண்டனையை மலர்ச்சியோடு ஏற்று அனைவரையும் வழிநடத்தி பல ஆண்டுகளுக்குப் பிறகு வீட்டிலும், நாட்டிலும் மகிழ்ச்சியைத் தாண்டவமாடச் செய்தார் இராமன்.

அதே இராமாயணத்தில் குடும்பங்களுக்குள் பிளவு ஏற்பட்டதால், அவை சிதையுண்டு போனதைப் பார்க்கிறோம். இராவணனின் குடும்பமும், வாலியின் குடும்பமும் இதற்கு சிறந்த எடுத்துக்காட்டுகள்.

அதில் வரும் ஒவ்வொரு வார்த்தையும் இன்றும் சமுதாயத்தில் காணப்படுபவைகள்தான்.

எனவே இராமாயணம் கருத்துச்சுவை மிக்கது.

அடுத்து கவிதைச் சுவைமிக்கது இராமாயணம் என்பது சாலப்பொருந்தும்.

கவிதை குறித்த சில விளக்கங்களைப் பார்க்கலாம்.

கடுமையான உழைப்பு இருந்தால் போதும் ஒருவர் விஞ்ஞானியாகி விடலாம். ஆனால் மேதைகளால்தான் இலக்கியத்தை உருவாக்க முடியும் என்கிறார். நோபல் பரிசு பெற்ற அறிஞர் பெர்ட்ரண்ட் ரஸ்ஸல். 'கவிஞர்கள் பிறக்கிறார்கள் ஆக்கப்பட்டவர்களல்ல' என்கிறார் ஷெல்லி.

'ஒரு கவிதையைப் படிக்கின்றபோது, நீ உன்னையே மறந்துவிட வேண்டும். அதுதான் சிறந்த கவிதை' என்கிறார் ஒரு அறிஞர்.

'உயர்ந்த உள்ளங்கள் உயரிய இலட்சியங்கள் இவைகளைக் கொண்டவன் கவிஞன். அவன் ஒரு காலக்கண்ணாடி'

அனுமன் விலங்கினத்தைச் சேர்ந்தவன்தான். ஆனால் தனது ஒவ்வொரு செயலிலும் நீதியாகப் போராடி, அநீதியை எதிர்த்து, அனைவருக்கும் உதவுகின்ற ஆபத்பாந்தவனாக, அநாதரட்சகனாகக் காட்சியளித்து உயர்ந்த செயல்களைப் புரிந்து அனைவரின் உள்ளத்திலும் இடம் பிடித்து இன்று அனைவராலும் தெய்வமாக வழிபடுபவன் அனுமன்.

எனவே, விலங்குகூட மனிதனைவிட பல நல்ல பண்புகளைப் பெற்று தெய்வமாகலாம் என்பதற்கு இது ஒரு சிறந்த உதாரணம்.

இராமனும் மனிதன்தான். ஆனால், அவர் மனிதனுக்கு மேற்பட்ட பல செயல்களைப் புரிந்து அனைவரிடத்தும் பரிவுடன் நடந்து, மண்ணாசை, பொன்னாசை ஆகியவற்றைத் துறந்து, உற்றார் உறவினர்களை மறந்து, அரண்மனை வாழ்வினை ஒதுக்கி ஆரண்ய வாழ்வை மேற்கொண்டு, மனிதர்களோடு வாழ்ந்தது போக, விலங்குகளோடும் கானகத்தில் தனது இளமையைக் கழித்து, காட்டுத் தலைவனையும் விலங்கினையும், அரக்கனில் ஒருவனையும் தனது உடன் பிறப்புகளாக ஏற்று, சிறைப்பட்ட தனது துணைவியையும் கடல் கடந்து போராடி விட்டு பதினாலு ஆண்டுகளுக்குப்பிறகு அனைவரும் போற்றிப் பாராட்டும் வகையில் முடிசூட்டிக் கொள்கிறார்.

இத்தகைய ஒரு மாமனிதரை வையகத்தில் காண்பதரிது. எனவேதான், அவர் மனிதராக வாழ்ந்தாலும், அவரைத் தெய்வமாக அனைவரும் போற்றிப் புகழ்கின்றனர்.

இராமாயணம் நமக்குக் கற்பிக்கும் பாடம், மனிதன் மிருக நிலைக்கு தன்னைத் தாழ்த்திக் கொள்ளக்கூடாது.

மனிதன் மனிதனாக வாழக் கற்றுக் கொள்ள வேண்டும்.

மனிதன் தியாக உணர்வும், தொண்டுள்ளமும் கொண்டிருந் தால் தெய்வமாகத் திகழலாம்.

இது எவர் கையிலும் இல்லை.

நம் கையில்தான் உள்ளது.

# உறுப்பினர்கள்

திரு. எம். மதியழகன்
திருமதி. எல். தேன்மொழி
முனைவர். பி. மகாலிங்கம்
திரு. பி. பாரஸ்சந்த் ஜெயின்
முனைவர் கி. பார்த்திபராஜா
திரு. கே.ஏ. குணசேகரன்
திரு. இ. மனோகரன்
திரு. ஏலகிரி வி. செல்வம்
திரு. பி. அச்சுதன்
திரு. சி. சுரேஷ்குமார்
திரு. ஜீ.ஆர். சாமிசெட்டி
திரு. ஜி. சுகுமார்
திரு. வி.எஸ். சௌரிராஜன்
திரு. சி.எல். இரகுநாதன்
நல்லாசிரியர். சி. புவனேஸ்வரி
திரு. தமிழ் திருமால்
திரு. வ. புரட்சி
திரு. மு. முனிசாமி
திரு. ஆர். கார்த்திகேயன்
திரு. எம். மாங்கிலால் ஜெயின்
திரு. இரா. ரமேஷ்
திருமதி. G. லதா
திரு. P. சின்னபையன்

நல்லாசிரியர் G. வீரமணி
நல்லாசிரியர் V. சுந்தரம்
திரு. R. ஜெகதீசன்
திரு. M.L. குடியண்ணன்
திரு. L. மணி
திரு. C. பாண்டியன்
திரு. V. ஜெயக்குமார்
திரு. P.S. கோவிந்தராஜன்
திரு. R. நாகேந்திரன்
புலவர் தி.கு. பொன்னம்பலம்
திரு. ஹேமலதா இரவிச்சந்திரன்
திரு. T.R. செல்வம்
முனைவர் க. மோகன் காந்தி
திரு. V.K. ஆனந்த்
திரு. R. சாட்ஜீ குமார்
திரு. K. உதயகுமார்
நல்லாசிரியர் து. துரைமணி
திரு. கே. பழனிச்சாமி
திரு. A.M. நடராஜன்
திரு. H. வெங்கோபன்
திரு. B. சுப்பிரமணி
திரு. D. கருணாமூர்த்தி
திரு. T. தினேஷ்